# சத்திய மார்க்கம்



அபூ அமீனாஹ் பிலால் ஃபிலிப்ஸ்

தமிழில்:
எஸ்.எம். மன்சூர்

COOPERATIVE OFFICE FOR CALL AND GUIDANCE IN AL-BATHA
( UNDER THE SUPERVISION OF THE MINISTRY OF ISLAMIC AFFAIRS )
P.O.Box No 20824 - Riyadh 11465 K.S.A.
Tel: 4030251 - 4083405 FAX: 4059387

புதிய பக்க அமைப்பு:

# COOPERATIVE OFFICE FOR CALL AND GUIDANCE IN AL- BAT'HA

UNDER THE SUPERVISION OF THE MINISTRY OF ISLAMIC AFFAIRS, ENDOWMENTS, PROPAGATION AND GUIDANCE

P.O. BOX: 20824, RIYADH 11465

TEL: 4030251, 4034517 FAX: 4059387

*LECTURE HALL - TEL: 4083405*

# சத்திய மார்க்கம்

அபூ அமீனாஹ் பிலால் ஃபிலிப்ஸ்

தமிழில்:
எஸ்.எம். மன்சூர்

அழைப்பு, வழிகாட்டல்களுக்கான கூட்டுறவுச் செயலகம்,
அல்- பதீஆ, சனசமூகப் பிரிவு
ரியாத், சவூதி அரேபியா

# இஸ்லாம்

இஸ்லாம் என்பது ஓர் அறபுச் சொல். அதன் கருத்து என்ன என அறிந்து கொள்வது அனைவருக்கும் அவசியம்.

இவ்வுலகில் உள்ள அனைத்து மதங்களும். ஒன்றில் தனிப்பட்ட ஒருவரின் பெயரிலோ அல்லது ஒரு சமூகத்தின் பெயரிலோ இலங்கி வருவதை நாம் காண முடிகின்றது. கிறிஸ்தவ மதம் இயேசு கிறிஸ்துவின் பெயரிலும், பௌத்த மதம் மகான் புத்தர் பெயரிலும், கொன்பியூஸியஸ் மதம் கொன்பியூஸியஸ் பெயரிலும், மார்க்சியவாதம் கால்மார்க்ஸ் பெயரிலும் இலங்கி வருகின்றன. யூத மதம் யூதியா என்ற நாட்டில் யூத கோத்திரத்தில் தோன்றியதால் அதற்கு அந்தப் பெயர் வந்தது. அதேபோன்று, இந்து மதம் இந்தியாவில் இந்து சமூகத்தில் தோற்றம் பெற்றதால் அதற்கு அப்பெயர் வந்தது.

எனினும், இஸ்லாம் தனிப்பட்ட ஒருவரின் பெயரிலோ, அல்லது ஏதாவதொரு நாடு, சமூகம் என்ற பெயரிலோ தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளவில்லை. இஸ்லாம், இந்தப் பிரபஞ்சத்தின் அதிபதியாகிய அல்லாஹ்வினால் மனிதனுக்குத் தரப்பட்ட சத்திய மார்க்கமாகும். அதன் அடிப்படை நோக்கம் முழு மனித சமுதாயமும் அல்லாஹ்வுக்கு அடிபணிந்து நடக்க வேண்டும் என்பதாகும்.

இஸ்லாம் என்ற அறபுச் சொல்லுக்கு அடிபணிதல், கீழ்ப்படிதல், இணங்கி நடத்தல் போன்ற கருத்துக்கள் உண்டு. இக்கருத்துக்களுக்கமைய யாரேனும் ஒருவர் அல்லாஹ்வுக்கு அடிபணிந்து, அவனுக்கு மட்டும் வணங்கி, வழிபட்டு, அவன் காட்டித் தந்த வழிமுறைப்படி வாழ்ந்தால் அவர் ஒரு முஸ்லிமேயாவார். இஸ்லாம் என்ற சொல்லில் சமாதானம் என்ற கருத்தும் உண்டு. எனவே, எவனொருவன் அல்லாஹ்வுக்கு முழுமையாகவே அமைதியை, சமாதானத்தை அடைவார் என்பது இதிலிருந்து விளங்கிக் கொள்ள முடிகிறது.

இஸ்லாம், ஏழாம் நூற்றாண்டில், அறபு நாட்டில் வாழ்ந்த முஹம்மது (ஸல்) அவர்களால் கொண்டுவரப்பட்ட மார்க்கம் அன்று, அது அவர்கள் மூலம் இறுதியாகத் தரப்பட்டது உண்மையே. இஸ்லாம் முதன் முதல் அருளப்பட்டது உலகின் முதல் மனிதரும் முதல் இறை தூதருமான ஆதம் (அலை) அவர்களுக்கேயாகும். அவர்களில் இருந்து ஆரம்பமான மனித வர்க்கத்தில் தோன்றிய எல்லா இறைத் தூதர்களினதும் மார்க்கம் இஸ்லாமேயாகும்.

அல்லாஹ்வால் அருளப்பட்ட இஸ்லாத்திற்கு 'இஸ்லாம்' என்று பெயரிடப்பட்டது மனிதனால் அல்ல. அல்லாஹ்வால் வைக்கப்பட்ட சிறப்புப் பெயராகும். அதுபற்றி அல்குர்ஆன் மிகத் தெளிவாக எடுத்துக் கூறுகின்றது.

اليوم أكملت لكم دينكم وأتممت عليكم نعمتي ورضيت لكم الإسلام دينا

"இன்றைய தினம் உங்களுக்காக உங்கள் மார்க்கத்தை பரிபூரணமாக்கிவிட்டேன், மேலும் நான் உங்கள் மீது என் அருட் கொடையைப் பூர்த்தியாக்கிவிட்டேன். இன்னும் உங்களுக்காக நான் இஸ்லாம் மார்க்கத்தையே (இசைவானதாகத்) தேர்ந்தெடுத்துள்ளேன்" (5:3)

ومن يبتغ غير الإسلام دينا فلن يقبل منه

"இன்னும் இஸ்லாம் அல்லாத (வேறு) மார்க்கத்தை எவரேனும் விரும்பினால் (அது) ஒரு போதும் அவரிடமிருந்து ஒப்புக் கொள்ளப்படமாட்டாது" (3:85)

ما كان إبراهيم يهوديا ولا نصرانيا ولكن كان حنيفا مسلما

"இப்றாஹீம் யூதராகவோ அல்லது கிறிஸ்தவராகவோ இருக்கவில்லை. ஆனால், அவர் (அல்லாஹ்விடம்) முற்றிலும் (சரணடைந்த) நேர்மையான முஸ்லிமாக இருந்தார். (3:67)

மூஸா (மோஸஸ்) நபியவர்களின் வழி நடந்தவர்கள், அல்லது அவர்களது வழித் தோன்றல்களை விளித்து. 'உங்கள் மதம் யூத மதமே' என்று அல்லாஹ்

மொழிந்ததாக பைபிளில் எங்கும் காணப்படவில்லை. அதே போன்று ஈஸா (இயேசு கிறிஸ்து) நபியவர்களது வழியில் சென்றவர்களது மார்க்கம் 'கிறிஸ்தவ மார்க்கம்' எனவும் கூறப்படவில்லை.

நாம் தெரிந்து கொள்ள வேண்டிய ஒரு முக்கியமான விஷயம் இருக்கின்றது. அதுதான் 'க்ரய்ஸ்ட்' என்றும் 'ஜீஸஸ்' என்றும் உள்ள பெயர்கள், இயேசு நாதருடையனவா என்பதாகும். உண்மையில், அவை அவர்களுக்குரிய பெயர்களேயல்ல. 'க்ரய்ஸட்' என்பது 'க்ரிஸ்டோஸ்' என்ற கிரேக்க சொல்லில் இருந்து பிறந்ததே. 'க்ரிஸ்டோஸ்' என்றால் துன்பத்திற்கு இலக்கானவர்' என்று பொருள்படும். 'க்ரய்ஸ்ட்' என்பது 'மெஸய்யாஹ்' என்ற ஹீப்ரு பெயரின் கிரேக்க மொழி பெயர்ப்பாகும். மேலும் 'ஜீஸஸ் என்பதானது ஈஸா என்ற ஹீப்ரு பெயரின் லத்தீன் மொழிபெயர்ப்பாகும்.

எது எப்படியிருப்பினும், வசதியைக் கருதி இச்சிறிய நூலில் நபி ஈஸா (அலை) அவர்களது பெயரை இயேசு நாதர் என்றே குறிப்பிட்டுச் சொல்ல விழைகின்றேன்.

உலகில் தோன்றிய ஏனைய இறைத் தூதர்களைப் போன்று இயேசு நாதரும் தமது சீடர்களுக்குப் போதித்தது அல்லாஹ் ஒருவனுக்கு மட்டும் அடிபணிந்து நடக்கும்படியே. மேலும், மனிதன் தனது மனதால் உருவாக்கிக் கொண்ட தவறான தெய்வ நம்பிக்கைகளிலிருந்து தூர விலகி நிற்கும்படியும் அவர்கள் போதனை புரிந்தார்கள்.

பைபிளின் புதிய ஏற்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ளபடி,

"சுவனத்தில் போன்று இங்கும் உன் கட்டளைகளுக்கேற்ப செயற்படுவோமாக" என்று பிரார்த்தனை செய்யும்படி அவர் தனது சீடர்களுக்கு அறிவு புகட்டினார்.

## இஸ்லாத்தின் தூது

அல்லாஹ்வின் அருள் வழி இஸ்லாத்தின் அடிப்படைத் தூதானது முழு மனித சமுதாயமும் அவனுக்கு முழுமையாகக் கட்டுப்பட வேண்டும், அவனது கட்டளைகளை ஏற்க வேண்டும், அவற்றுக்கமைய வாழ்வின் அனைத்துத் துறைகளிலும் வாழ வேண்டும் என்பதாகும்.

மனிதன் அல்லாஹ்வுக்கன்றி யாரேனும் தனிப்பட்டவர்களுக்கோ, விக்கிரகங்களுக்கோ, குறிப்பிட்ட ஓர் இடத்திற்கோ அல்லது வேறு எதற்குமோ வணங்கி வழிபடுவதிலிருந்து தன்னைத் தடுத்துக் கொள்வது இஸ்லாமாகும்.

இவ்வுலகிலுள்ள அனைத்தும் அல்லாஹ்வின் படைப்புக்களாகும். எனவே, படைப்புக்களையல்ல, அவற்றைப் படைத்தவனான அல்லாஹ்வை வணங்கி, வழிபடும்படி இஸ்லாம் கூறுகின்றது. மனிதன் வணங்கி வழிப்படத் தகுந்தவன் அல்லாஹ் ஒருவன் மட்டுமே. அதே போன்று, மனிதனின் பிரார்த்தனைகளுக்குப் பதில் அளிப்பவனும் அவனேயாவான். யாரேனும் ஒருவன் ஒரு மரத்திடம் பிரார்த்தனை புரிந்து, அதற்குப் பதில் கிடைத்தது என்றால் அதன் கருத்து அந்த மரத்திடமிருந்து பதில் கிடைத்தது என்பதல்ல. உண்மை என்னவெனில், அத்தகைய பதிலொன்று கிடைக்க வேண்டும் என்ற இறை நியதியும் சந்தர்ப்பமும் அப்போது

அமைந்ததேயாகும். சிலர் 'அது அப்படியல்ல' என விவாதிக்கலாம். அத்தகைய விவாதங்கள் கேளிக்குரியனவே: உண்மையில் மரமொன்றுக்கு வணங்குவதாலோ அதனிடம் பிரார்த்தனை புரிவதாலோ எந்தப் பயனுமில்லை.

அது மட்டுமல்ல. இயேசு நாதர், புத்தர், கிருஸ்ணர், புனித க்ரிஸ்டோடர், புனித ஜோட் ஆகியோரிடம் மட்டுமன்றி முஹம்மது (ஸல்) அவர்களிடம் கூட நாம் பிரார்த்தனை செய்து பதில் கிடைக்கப் பெற மாட்டோம். பிரார்த்தனைகளுக்குப் பதில் அளிப்பவன் அல்லாஹ் மட்டுமே. இயேசு நாதர் தனது சீடர்களுக்குப் போதனை புரிந்ததும்; அல்லாஹ்வை விடுத்து தன்னிடம் பிரார்த்தனை புரிதல் ஆகாது என்றேயாகும்.

அல்குர்ஆன் குறிப்பிடுகின்றது:

وإذ قال الله يعيسى ابن مريم ءأنت قلت للناس اتخذوني
وأمي إلـهين من دون الله قال سبحنك ما يكون لي
أن أقول ما ليس لي بحق

"இன்னும், மர்யமுடைய மகன் ஈஸாவே? 'அல்லாஹ்வையன்றி என்னையும் என் தாயாரையும் இரு கடவுள்களாக ஆக்கிக் கொள்ளுங்கள்' என்று மனிதர்களிடம் நீர் கூறினீரா?" என்று அல்லாஹ் கேட்கும் பொழுது, அவர் " நீ மிகவும் தூய்மையானவன், எனக்கு உரிமையில்லாத ஒன்றை நான் சொல்வதற்கில்லை......." (5:116)

இயேசு நாதர் தமக்கு தாமே வணக்க வழிபாடுகளை செய்து கொள்ளவில்லை. அவர்கள் கூட அடிபணிந்ததும் வணங்கியதும், வழிபட்டதும் அல்லாஹ் ஒருவனுக்கே. குர்ஆனின் 'சூரத்துல் பாத்திஹா' எனும் சிறிய அத்தியாயத்தின் நான்காவது வசனத்தில் இவ்வடிப்படைக் கருத்து அடங்கப் பெற்றுள்ளது.

அவ்வசனம் வருமாறு:

إياك نعبد وإياك نستعين

"(யா அல்லாஹ்) உன்னையே நாங்கள் வணங்கு (இபாதத் செய்)கிறோம், உன்னிடமே நாங்கள் உதவியும் தேடுகிறோம்."

பரிசுத்த குர்ஆனில் இன்னுமொரு இடத்தில் அல்லாஹ் இவ்வாறு மொழிகின்றான்.

وقال ربكم ادعوني أستجب لكم

> "உங்கள் இறைவன் கூறுகின்றான்: என்னையே நீங்கள் பிரார்த்தியுங்கள், நான் உங்(கள் பிரார்த்தனை)களுக்குப் பதிலளிக்கிறேன்." (40:60)

அல்லாஹ்வுக்கும் அவனது படைப்புக்களுக்கும் இடையே பாரிய வித்தியாசமொன்று இருப்பதாக இஸ்லாத்தின் தூது நமக்கு அறிவுறுத்துகின்றது. அல்லாஹ் அவனது படைப்போ அல்லது அவனது படைப்பின் ஒரு பகுதியோ அல்ல. அதே போன்று, அவனால் படைக்கப்பட்டவைகளும், அவனோ அவனது ஒரு பகுதியோ அல்ல.

இந்த உண்மை மிகத் தெளிவாகக் காணக்கூடியதாக இருப்பினும், அவனுக்குப் பதிலாக அவனது படைப்புக்களுக்கு வணக்க வழிபாடுகள் செய்வதும், கிரியைகள் செய்வதும் முட்டாள்தனமானது என அத்தகைய செய்கைகளில் ஈடுபட்டிருப்போருக்கு தெரியாதிருப்பது ஆச்சரியமேயாகும். இறைவனின் படைப்புக்களை வணங்கி வழிபடுவோர். 'இறைவன் தனது படைப்புக்கள் அனைத்திலும் சங்கமமாகி இருக்கிறான்' என்றும், 'அவனது படைப்புக்கள் சிலவற்றின் மூலம் அவன் எத்தகைய சிரேஷ்டமானவன்' என்றும் அறிய முடிகின்றதால், அவனது படைப்புக்களை வழிபடுவதாகவும், அத்தகைய வழிபாடுகள் இறைவனை வழிபடுவதாகவே அமையும் எனவும் தர்க்கிக்கின்றனர்.

எனினும், இறைத்தூதர்கள் மனிதர்களுக்காக கொண்டுவந்த தூதில்; மனிதன், (இறைவனுக்கு) அல்லாஹ்வுக்கு மட்டுமே தனது வணக்க வழிபாடுகளை செலுத்த வேண்டும் எனக் கூறப்படுகின்றது. அத்துடன் வெளிப்படையாகவோ மறைமுகமாகவோ அவனது படைப்புக்களை வணங்கி வழிப்படுவதிலிருந்து மனிதன் தன்னைத் தற்காத்துக் கொள்ள வேண்டும் எனவும் கூறப்படுகிறது. அல்லாஹ் இவ்வாறு மொழிகிறான்.

ولقد بعثنا في كل أمة رسولا أن اعبدوا الله واجتنبوا الطغوت

"மெய்யாக நாம் ஒவ்வொரு சமூகத்தாரிடத்திலும் 'அல்லாஹ்வையே நீங்கள் வணங்குங்கள், ஷைத்தான்களை விட்டும் நீங்கள் விலகிச் செல்லுங்கள்' என்று (போதிக்குமாறு) நம்

தூதர்களை அனுப்பிவைத்தோம்" (16:36)

'கற்பனை மிகுந்த மனிதனின் கைவண்ணத்தில் உருவான சிலைக்கு முன்னால் விழுந்து வணங்கி வழிபடுகிறீர்களே? என்று சிலையை வழிபடும் ஓர் ஆணிடமோ ஒரு பெண்ணிடமோ கேட்டால், இருவரது விடையும் ஒன்று போல் இருக்கும். அவர்கள் கூறுவதெல்லாம். நாம் கல்லினாலோ, மண்ணினாலோ உருவாக்கப்பட்ட சிலைகளை வணங்குவதும் இல்லை, வழிபடுவதும் இல்லை. மாறாக, அவற்றினூடாக இறைவனையே வணங்கி வழிபடுகின்றோம் என்பதுதான். இக்குகூற்றை மற்றொரு விதத்தில், 'நாம் அந்தச் சிலைகளை அல்ல, அவற்றைப் பயன்படுத்தி, மனதை ஒருமைப்படுத்தி, இறைவனையே வணங்கி வழிபடுகிறோம்' என்று கூறுவதாகவும் கொள்ள முடியும். இறைவன் தனது படைப்புக்களில் சங்கமமாகியுள்ளான், அவதாரம் எடுக்கின்றான் என்ற கருத்தை ஏற்றவாகள் இக்கருத்தை ஏற்க முன்வரலாம்.

எனினும், இஸ்லாத்தின் மூலக்கோட்பாடுகளை நன்கு அறிந்து, அதனுடன் நெருங்கிய உறவு கொண்ட எவரும் இக்கருத்தை ஒருபோதும் ஏற்கமாட்டார்கள்.

தமக்கு தெய்வீகத்தன்மை இருப்பதாக பிரபல்யப்படுத்திக் கொண்டு ஒவ்வொரு யுகத்திலும் தோன்றியவர்கள், 'மனிதனில் இறைவன் சங்கமமாகி இருக்கிறான்- அவதாரம் எடுக்கின்றான் என்ற தவறான கருத்தையே தமக்காதாரமாகக் கொண்டார்கள். இக்கருத்தை அவர்கள் பொதுப்படையாகக் கூறிக் கொண்டாலும் தனிப்பட்ட முறையில் தன்னுடன் இறைவன் மிகவும் நெருக்கமாக

இருக்கின்றான்.' என்று கூற சமூகத்தில் தமக்கு விஷேடமான இடத்தைப் பெறமுயன்றார்கள் என்பதைக் காணலாம். 'நானே இறைவன்' அல்லது 'நான் இறைவனின் அவதாரம்' எனக் கூறி, மற்றவர்கள் தமக்குக் கட்டுப்பட்டு, வணக்க வழிபாடுகள் செய்ய வேண்டுமெனக் கோரி நின்றனர். இப்படி வாதிட்டு, கோரிக்கை விடுத்த அவர்கள் மறைந்தபின், அவர்களது சீடர்கள் அக்கருத்தை ஏற்றவர்கள் மத்தியில் சிறப்புக்குறியவர்களாக மாறி இன்பமயமான வாழ்வை அமைத்துக் கொண்டனர்.

இஸ்லாத்தின் மூலக் கோட்பாடுகளுடன் மிகச் சாதாரண அளவு அறிவு கொண்ட ஒருவர் கூட, தன்னைப் போன்ற மற்றொரு மனிதரை எக்கட்டத்திலும் எந்தச் சூழ்நிலையிலும் வணங்கவோ வழிபடவோ இணங்கமாட்டார் என்பது திண்ணம்.

முஹம்மத் (ஸல்) அவர்களின் போதனைகள் அனைத்தினதும் அடித்தளம் அல்லாஹ்வைப் பற்றிய ஏகத்துவக் கோட்பாடு சார்ந்ததாகும். அது கீழ்க்காணும் சிறிய சொற்றொடரினுள்ளே அடங்கப் பெற்றுள்ளது.

லாஇலாஹ இல்லல்லாஹ்

لا إِلَٰهَ إِلَّا الله

இதன் கருத்து:

"அல்லாஹ்வைத் தவிர வேறு இலாஹ் - இறைவன் இலை' என்பதாகும்.

இச்சொற்றொடரை எவர் உள்ளத்தால் ஏற்று, 'வாழ்வால்,

நிலைநிறுத்துவேன்' என உறுதிபூண்டு, நாவினால் மொழிந்தால் அவர் ஒரு முஸ்லிமாவார். இஸ்லாத்தை தனது மார்க்கமாக - வாழ்க்கை நெறியாக ஏற்றுக் கொண்டவர் ஆவார். இச் சொற்றொடரின் கருத்தை உளப்பூர்வமாக ஏற்றுக் கொண்ட ஒருவர் சுவனத்தைப் பெறும் தகுதியுடையவர் ஆவார்.

முஹம்மத (ஸல்) அவர்கள் கீழ்க் காணும்வாறு மொழிந்ததாக அபூதர் (றழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

'யாரேனும் ஒருவர், அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்று கூறி அதோடு (ஒரு விசுவாசியாக) மரணித்தால் அவர் சுவனம் புகுவார்.' (புஹாரி, முஸ்லிம்)

ஓர் இறைவன் என்ற ரீதியில் அல்லாஹ்வுக்கு முழுமையாக அடிபணிந்து நடப்பது, அவ்வாறு நடப்பதன் மூலம் அவனது அருளைப் பெற்றுக் கொள்வது, பல தெய்வ வாதத்தையும், பல தெய்வவாதம் புரிபவர்களையும் நிராகரிப்பது என்பன இச்சொற்றொடரில் அடங்கப்பெற்றுள்ளன.

## அசத்திய மார்க்கங்களின் தூது

உலகில் பல மதங்கள், தத்துவங்கள், வழிபாட்டு முறைகள், அமைப்புக்கள், பல்வேறு சிந்தனைப் பிரிவுகள் என்பன இருக்கின்றன. இவற்றில் ஈடுபாடு கொண்டுள்ளோர் தாம் நேர்வழியில் இருப்பதாகவும், இறைவனின் சத்திய மார்க்கத்தில் இருப்பதாகவுமே கூறுகின்றனர். அப்படியாயின், இவை யாவுமே நேரிய வழியில்

இருக்கின்றனவா? அல்லது ஏதாவது ஒரு பிரிவு நேர்வழியில் இருக்கின்றதா? எவ்வாறு தெரிந்து கொள்வது? அதற்கான அளவு கோல்கள் என்ன? போன்ற பல வினாக்கள் எழுவது இயல்பேயாகும்.

இந்த வினாக்களுக்கான விடைகளைப் பெறுவதற்கு ஓர் அழகான வழிமுறை இருக்கின்றது. அதாவது, இந்த மதங்களுள் அல்லது பிரிவுகளுள் மிக அழகான சொற்களைக் கொண்ட கருத்துக்கள் திணிக்கப்பட்டுள்ளளன. அவற்றை நீக்கி அந்த மதங்கள் அல்லது பிரிவுகளின் அடிப்படை நோக்கமும் உண்மையும் என்ன எனப் பார்க்க வேண்டும். அவை வெளிப்படையாகவும் இரகசியமாகவும் எத்தகைய வழிபாட்டு முறைகளின்பால் மனிதனை அழைக்கின்றன என்பதை அறிய முனைதல் வேண்டும்.

அப்பொழுது இந்த அசத்திய மார்க்கங்களும், பிரிவுகளும் இறைவனைப் பற்றிய பொதுவான அடிப்படைக் கருத்துக்கள் பல கொண்டிருப்பதைக் காணலாம். அவையாவன. ‘எல்லா மனிதர்களும் இறை அவதாரங்களே!, ‘சில குறிப்பிட்ட விஷேட மனிதர்கள் இறை அவதாரம் பெற்றவர்களே! அல்லது ‘மனிதனின் கற்பனா சக்தியிலிருந்து உருவானவனே இறைவன்! என்பனவாகும்.

அசத்திய மதங்கள், இறைவனை அவனது படைப்புக்களின் தோற்றங்களுக்கமைய வழிபட மதங்கள், படைப்புக்களில் அல்லது அவற்றின் சிற்சில பகுதிகளில் தெய்வீகத் தன்மை இருப்பதாகக் கூறியே மக்கள் முன் தமது அழைப்பை சமர்ப்பிக்கின்றன.

உதாரணமாக இயேசு நாதரை எடுத்துக் கொள்ளலாம். அவர்கள் தமது சீடர்களுக்குக் கட்டளையிட்டது அல்லாஹ் ஒருவனுக்கு மட்டும் வணங்கி வழிபட வேண்டும் என்றே. என்றாலும், அவரைப் பின்பற்றுபவர்களாக இன்று இருப்பவர்கள், அவருக்கு தெய்வீகத் தன்மையைக் கற்பித்து, அவர் பெயரில் சிலைகளை செதுக்கி, அவற்றுக்கு வணங்கி வழிபடுகின்றனர்.

வணக்க வழிபாடுகளின் உண்மையான நோக்கத்தைப் புரிந்து கொள்ளும் நோக்குடன் அசத்திய மதங்கள், மார்க்கங்களின் பால் ஒரு பார்வையைச் செலுத்தினால், அவற்றின் பொய்மையை நன்கு விளங்கிக் கொள்ள முடியும். அத்துடன், அம்மதங்களின் இயற்கையான ஆரம்ப நிலை பிறகு எவ்வாறு மாறுபட்டது என்பதையும் தெரிந்து கொள்ள முடியும்.

அல்லாஹ் இவ்வாறு மொழிகின்றான்:

ما تعبدون من دونه إلا أسماء سميتموها أنتم وءاباؤكم
ما أنزل الله بها من سلطان إن الحكم إلا لله أمر ألا تعبدوا إلا إياه
ذلك الدين القيم ولكن أكثر الناس لا يعلمون

"அவையன்றி நீங்கள் வணங்கிக் கொண்டிருப்பவை யாவும், நீங்களும் உங்கள் மூதாதையரும் வைத்துக் கொண்ட (வெறும் கற்பனைப்) பெயர்களேயன்றி வேறில்லை, அவற்றுக்கு

அல்லாஹ் யாதொரு ஆதாரத்தையும் இறக்கி வைக்கவில்லை. அல்லாஹ் ஒருவனுக்கே அன்றி (வேறெவர்க்கும்) அதிகாரம் இல்லை. அவனையன்றி (வேறு எவரையும்) நீங்கள் வணங்கக் கூடாது என்று அவன் (உங்களுக்குக்) கட்டளையிட்டிருக்கின்றான். இதுவே நேரான மார்க்கமாகும். ஆனால் மனிதர்களில் பெரும்பாலோர் இதனை அறிந்து கொள்வதில்லை" (12:40)

எல்லா மதங்களும் நல்லதையே சொல்கின்றன, அறிவு புகட்டுகின்றன. எனவே, குறிப்பிட்ட ஒரு மதத்தை மாத்திரம் பின்பற்ற வேண்டும் என்று கூறுவது ஏன்? என்று யாரேனும் தர்க்கிக்க முடியும்.

இதற்கான விடை இதுதான்.

எல்லா அசத்திய மதங்களும் படைப்புக்களுக்கு வணங்கி வழிபடும் பாவத்தைப் போதிக்கின்றன. மனிதன் செய்யும் மிகவும் பாரிய பாவம் என்னவெனில், படைப்புக்களை வணங்கி வழிபடுவதானது மனிதனைப் படைத்ததன் நோக்கத்திற்கு முற்றிலும் எதிரான செயலாகும். மனிதன் படைக்கப்பட்டது அல்லாஹ் ஒருவனுக்கு மட்டும் அடிபணிந்து நடக்கவே, கீழ்ப்படிந்து செயற்படவே, வணங்கி வழிபடவேயாகும்.

அல்லாஹ் மிகத் தெளிவாக தனது அருள்மறையில் இவ்வாறு கூறுகின்றான்.

وما خلقت الجن والإنس إلا ليعبدون

"இன்னும், ஜின்களையும் மனிதர்களையும் அவர்கள் என்னை வணங்குவதற்காகவேயன்றி நான் படைக்கவில்லை." (51:56)

விக்கிரகங்களுக்கு வணக்க வழிபாடுகள் செய்யத் தூண்டுகின்ற, படைப்புக்களுக்கு வணக்க வழிபாடுகள் செய்வதானது, அல்லாஹ்வின் மன்னிப்பைப் பெற்றுத்தராத மிகவும் பாரிய பாவச் செயலாகும். இந்தப் பாவச் செயலில் ஈடுபடுபவர் அதே நிலையில் மரணிப்பாரெனில் அவரது மறுவுலக வாழ்வு மிகவும் வேதனை தரத்தக்கதாக அமைய முடியும். இது நாம் கூறும் மிகச் சாதாரணமான ஒரு கருத்து அல்ல. சர்வ வல்லமை படைத்த அல்லாஹ்வே தனது அருள்மறையில் இது பற்றி குறிப்பிட்டுள்ளான்.

إن الله لا يغفر أن يشرك بهۦ ويغفر ما دون ذ ٰلك لمن يشاء

"நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணைவைப்பதை மன்னிக்கமாட்டான், இதைத் தவிர, (மற்ற) எதையும் தான் நாடியவர்களுக்கு மன்னிப்பான்" (4:48, 116)

## இஸ்லாத்தின் சர்வதேசியத் தன்மை

அசத்திய மதங்களை- மார்க்கங்களைப் பின்பற்றுவதால் மனிதன் தவறின்பால் இட்டுச் செல்லப்படுகின்றான். எனவே, சத்திய மார்க்கமான இஸ்லாத்தை முழு உலக மக்களும் விளங்கிக் கொள்வதும், அதன் பின் அதனைத் தமது வாழ்க்கை நெறியாக ஏற்றுக் கொள்வதும் மிக மிக அவசியமாகும். இஸ்லாம் குறிப்பிட்டதொரு சமூகத்திற்கோ, நாட்டிற்கோ, இடத்திற்கோ, காலத்திற்கோ,

உரியதொரு மதமல்ல. இதனைப் பின்பற்றுவோர் சுவனத்தைப் பெற்றுக் கொள்வதற்கு (கிறிஸ்தவ மதத்தில் போல்) ஞானஸ்நானம் செய்ய வேண்டும் என்றோ, குறிப்பிட்ட ஒருவரின் இரட்சிப்பில் தங்கியிருக்க வேண்டும் என்றோ கூறப்படுவது இல்லை. இஸ்லாத்தின் நோக்கங்கள் யாவும் தங்கியிருப்பது, முழு மனித சமூதாயமும் அல்லாஹ் ஒருவனுக்கு மட்டும் அடிபணிந்து நடக்க வேண்டும் என்பதிலேயேயாகும்.

அல்லாஹ்வின் ஏகத்துவம், அவனது தனித்துவம் வாய்ந்த தன்மை, அவனுக்கும் அவனுடைய படைப்புக்களுக்கும் இடையிலான வேறுபாடு என்பன பற்றி அறிவை மனிதன் என்றாவது பெற்றுக் கொண்டு, அவனுக்கு முற்றாக அடிபணிந்து நடக்க முற்பட்டால், அன்றே அவன் தனது உடல், ஆன்மா ஆகிய இரண்டின் மூலமும் முஸ்லிம் ஆகின்றான். சுவனத்தைப் பெறும் தகுதியையும் பெறுகின்றான். தூர இடத்தில் அறிமுகமற்று வாழும் ஒருவர் கூட அல்லாஹ்வின் படைப்புக்களை வணங்கி வழிபடுவதிலிருந்து முற்றாக விடுபட்டு அல்லாஹ்வுக்கு மட்டும் இணங்கி நடப்பவராக மாறுவதன் மூலம் அவர் எப்பொழுதும் ஒரு முஸ்லிமாக முடியும்.

மற்றொரு முக்கியமான அம்சம் என்னவெனில், அல்லாஹ்வுக்கு அடிபணிவது என்பது ஒருவர் நல்லது கெட்டது இரண்டில் ஒன்றை தெரிந்து எடுத்துக் கொள்வதைப் பொறுத்து அமைகின்றது. இஸ்லாம் கூறுகின்றபடி எவர் தீயவற்றிலிருந்து விலகி, நல்லவற்றை எடுத்துக் கொள்கின்றாரோ அவர் அல்லாஹ்வின் உவப்புக்குரிய ஒருவரும், அவனுக்கு கீழ்ப்படிபவரும்

ஆவார்.

மனிதன் தெரிவு செய்து கொள்பவற்றுக்கு அவனே பொறுப்பாளி ஆவான். முடிந்த அளவு முயற்சித்து நன்மையைத் தேர்ந்தெடுத்து அவற்றில் ஈடுபாடு கொள்ளவும் தீமைகளை முற்றாகவே தவிர்த்துக் கொள்ளவும் திட சங்கற்பம் பூண வேண்டும். மிகச் சிறப்பான நன்மை என்னவெனில் அல்லாஹ்வுக்கு அடிபணிந்து அவனுக்கு மட்டும் வணக்க வழிபாடுகளைச் செய்வதே. மிகவும் கீழ்த்தரமான கண்டிக்கத்தக்க தீமை என்னவெனில் அல்லாஹ்வின் படைப்புக்களுக்கோ அல்லது அல்லாஹ்வுக்கும் அவனது படைப்புக்களுக்குமோ வணக்க வழிபாடுகள் செய்வதாகும்.

அல்குர்ஆன் இதுபற்றி இவ்வாறு கூறுகின்றது.

إِنَّ الَّذِينَ ءَامَنُوا وَالَّذِينَ هَادُوا وَالنَّصَـٰرَىٰ وَالصَّـٰبِـِٔينَ مَنْ ءَامَنَ
بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ وَعَمِلَ صَـٰلِحًا فَلَهُمْ أَجْرُهُمْ عِندَ رَبِّهِمْ
وَلَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُونَ

"ஈமான் கொண்டவர்களாயினும், யூதர்களாயினும், கிறிஸ்தவர்களாயினும், ஸாபியீன்களாயினும் நிச்சயமாக எவர் அல்லாஹ்வின் மீதும், இறுதி நாள் மீதும் நம்பிக்கை கொண்டு ஸாலிஹான (நல்ல) அமல்கள் செய்கின்றார்களோ அவர்களின் (நற்) கூலி நிச்சயமாக அவர்களுடைய இறைவனிடமே இருக்கின்றது, மேலும்,

அவர்களுக்கு யாதொரு பயமும் இல்லை. அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்" (2:62)

ولو أنهم أقاموا التورىٰة والإنجيل وما أنزل إليهم من ربهم لأكلوا
من فوقهم ومن تحت أرجلهم منهم أمة مقتصدة
وكثير منهم ساء ما يعملون

"இன்னும், அவர்கள் தவ்ராத்தையும், இன்ஜீலையும், இன்னும் தம் இறைவனிடத்திலிருந்து தங்களுக்கு இறக்கப்பட்டதையும், நிலைநாட்டியிருந்தால், அவர்கள் மேலே (வானத்தில்) இருந்தும், தம் பாதங்களுக்கு அடியில் (பூமியில்) இருந்தும் (இன்பத்தைப்) புசித்திருப்பார்கள். அவர்களில் சிலர் (தாம்) நேர்வழியுள்ள சமுதாயத்தினராய் இருக்கின்றனர். அவர்களில் பெரும்பாலோர் செய்யும் காரியங்கள் மிகக் கெட்டவையாகும். (5:66)

## அல்லாஹ்வை அறிந்து கொள்ளல்

இங்கு மற்றொரு வினாவும் இருக்கின்றது. அதாவது, பல வகையான சமூக, கலாச்சார, பண்பாட்டுச் சூழல்களில் வாழும் எல்லா மனிதர்களும் அல்லாஹ்வில் நம்பிக்கை கொள்ள வேண்டும் என்பதை எவ்வாறு எதிர்பார்ப்பது? என்பதே அவ்வினாவாகும். அல்லாஹ்வுக்கு அடிபணிந்து, வணங்கி வழிபடும் பொறுப்பு மனிதன் மீது சுமத்தப்பட்டுள்ளதால், அவன் அல்லாஹ்வை அறிந்து கொள்ளும் வழியொன்று

இருக்கத்தானே வேண்டும்?

உண்மையில், அல்லாஹ் தன்னைப் பற்றி அறிவைப் பெறுவதிலிருந்து மனிதனை அனாதையாக்கி விடவில்லை. மாறாக, அல்லாஹ்வை அறிந்து கொள்ளும் சக்தியை முழு மனித சமுதாயமும் பெற்றுள்ளது என்று அல்குர்ஆன் குறிப்பிடுகின்றது. மனிதனின் ஒரு பகுதியான ஆன்மா, அல்லாஹ்வை அறிந்து கொள்ளும் ஆற்றலை தன்னுள் இயற்கையாகவே கொண்டுள்ளது.

அல்குர்ஆனின் சூரதுல் அஃறாப் 172, 173 எண்களையுடைய வசனங்கள், நபி ஆதம் (அலை) அவர்கள் படைக்கப்பட்ட போது, அவர்களிலிருந்து தோன்றவுள்ள எதிர்கால சந்ததியினரை ஒன்று கூட்டி, அல்லாஹ் இவ்வாறு வினவியதாக குறிப்பிடுகின்றன.

"நான் உங்களுடைய இறைவன் அல்லாவா?" அப்போது இவ்வினாவிற்கு விடையளித்த அவர்கள், 'மெய்தான், நாங்கள் சாட்சி கூறுகின்றோம்" என்று கூறினர். இவ்வாறு, ஆரம்பத்திலேயே அவர்களிடமிருந்து அல்லாஹ் வாக்குறுதியொன்றை வாங்கிக் கொண்டான்.

பின்னர், 'நான் இறைவன், எனக்கு மட்டுமே வணக்க வழிபாடுகள் செய்ய வேண்டும்' என்ற வாக்குறுதியைப் பெறக் காரணமென்ன, அல்லாஹ்வே விவரிக்கின்றான்.

"(ஏனெனில் இது நினைவூட்டப்படாததனால்) நிச்சயமாக இதனை (மறந்து) விட்டுப் பராமுகமாக இருந்து விட்டோம் என்று மறுமை நாளில் நீங்கள் (யாருமே) சொல்லாதிருக்கவும்'' என்று சொல்லலாம் என்பதற்காகவே. அதாவது 'அல்லாஹ்தான் எங்கள்

இறைவன் என்று எங்களுக்குத் தெரியாது, அவனை மட்டுமே வணங்க வேண்டும் என்று எமக்கு எவரும் சொல்லித் தரவும் இல்லை என்று மனிதர் வாதிடலாம் என்பதற்காகவே அவனிடம் அத்தகைய வாக்குறுதி பெறப்பட்டது.

அல்லாஹ், அதே வசனங்களில் மீண்டும் கூறுகின்றான், "(நீங்கள் கேட்கலாம்) இணைவைத்தவர்கள் எல்லாம் எங்களுக்கு முன் இருந்த எங்கள் மூதாதையர்களே, தாங்களோ அவர்களுக்குப் பின் வந்த (அவர்களுடைய) சந்ததிகள், அந்த வழி கெட்டோரின் செயலுக்காக நீ எங்களை அழித்துவிடலாமா? என்று

அல்லாஹ் இவ்வாறு விரிவாக விளக்கமளித்துச் சொல்வதில் இருந்து ஓர் உண்மை வெளிப்படுகின்றது. அதுதான் உலகில் பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் அல்லாஹ்வைப் பற்றிய இயற்கையான விசுவாசத்துடன் தான் பிறக்கின்றன என்பதாகும். அதேபோன்று அல்லாஹ்வை மட்டும் வணங்க வேண்டும், வழிபட வேண்டும் என்ற ஆசை இயற்கையாகவே அக்குழந்தையிடம் அமையப் பெற்றுள்ளது என்பதில் ஐயமில்லை. இதற்கு அறபு மொழியில் 'ஃபித்றாஹ்' எனக் கூறப்படுகின்றது.

அக்குழந்தையைத் தனியாக வைத்துவிட்டு நாம் ஒதுங்கி இருந்தால், அதன் அறிவுக்கமைய அல்லாஹ்வை வணங்கும், வழிபடும். எனினும் அது மாற்றம் பெறுவது சூழலில் காணப்படுபவைகளைப் பொறுத்தேயாகும். அல்லாஹ் மொழிந்ததாக முஹம்மத் (ஸல்) அவர்கள் கூறினார்கள். 'நான் எனது அடிமைகளை சத்திய மார்க்கத்தில் படைத்தேன். எனினும் துஷ்டர்கள்

அவர்களைத் தவறான வழியில் இட்டுச் சென்றார்கள்"

மேலும் முஹம்மத (ஸல்) அவர்கள் இவ்வாறு மொழிந்தார்கள்.

"எல்லாக் குழந்தைகளும் '.:.பித்றாஹ்' என்ற நிலையிலேயே பிறக்கின்றன. பின்னர் (அவர்களுடைய) பெற்றோரே அவர்களை யூதராகவோ, கிறிஸ்தவராகவோ அல்லது ஜெராஸ்தரராகவோ மாற்றுகின்றனர்" (புஹாரி, முஸ்லிம்)

அல்லாஹ் ஏற்படுத்தியுள்ள இயற்கை நியதிகளுக்கு அமைய அக்குழந்தை அவனுக்கு அடிபணியும் தன்மையைப் பெற்றுள்ளது போல் அதன் ஆன்மாவும் இயற்கையாகவே அவனுக்கு அடிபணியும் தன்மையைப் பெற்றுள்ளது. இது இயற்கையாகவே நடக்கும் ஒரு விஷயம். எனினும் அக்குழந்தையின் பெற்றோரே அதைத் தமது அடிச்சுவட்டில், தவறான வழிபாட்டு முறைகளில் கொண்டுபோக முயற்சிக்கின்றனர். அவ்வேளையில் தனது பெற்றோரின் வழிமுறைகளுக்கு எதிராக செயற்படும் சக்தி அதனிடம் இல்லாததால், அவர்கள் காட்டிய வழியிலேயே செல்ல முனைகின்றது. அப்பொழுது அக்குழந்தை பின்பற்றும் மார்க்கம் சிற்சில சம்பிரதாய சடங்குகளைக் கொண்டதாகவே இருக்கும். அதற்கு அக்குழந்தை பொறுப்பில்லாதது போலவே தண்டனையும் பெறமாட்டாது.

என்றாலும், மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான முழுக்கால வேளையிலும் உண்மையான இறைவன் (அல்லாஹ்) ஒருவன் இருக்கிறான் என்று சான்று பகரும்

அம்சங்கள் உலகெங்கும் பார்க்கக் கூடியவனாக இருக்கின்றான். மனிதனின் ஆன்மாவே 'இறைவன் இருக்கிறான்' என்பதற்குப் போதுமான சான்றாகும்.

எனவே, மனித சமுதாயம் நேர்மையாக சிந்தித்து, ஆக்க பூர்வமான வழிகளில் செயற்படுமாயின் தவறான கோட்பாடுகளில் இருந்து விடுபட்டு ஏக இறைவனான அல்லாஹ்வை ஏற்கும் என்பதில் ஐயமில்லை. அதற்கான வழிகள் அவர்களுக்குத் திறந்து வைக்கப்பட்டுள்ளன. எனினும், எப்பொழுதும், நிரந்தரமாக அல்லாஹ்வை உண்மைப்படுத்தும் அத்தாட்சிகளை மறந்து, மறுத்து வாழ முற்பட்டால், அவனது படைப்புக்களுக்கு வணக்கமும், வழிபாடும் செய்தால் அது பாரியதொரு குற்றமாகிவிடும். அதற்கான துன்பங்களிலிருந்து விடுபடுவது கஷ்டமேயாகும்.

ஓர் உதாரணம்:

தென்னமெரிக்க நாடான பிரஸீலின் அமஸோன் வனாந்தரத்தின் தென்கிழக்குப் பகுதியை யொட்டிய புராதன கிராமமொன்றில் வாழ்ந்த கோத்திரத்தார், தாம் வழிபடும் விக்கிரகமான 'ஸ்க்வட்ச்' (Skwatch) சை வைப்பதற்கென சிறிய கட்டிடம் ஒன்றை நிர்மாணித்தனர். அந்த விக்கிரகம் உலகிலுள்ள அனைத்தையும் படைத்த வல்லமை பொருந்திய இறைவனைப் பிரதிநிதித்துவப் படுத்தும் ஒன்று என்பது அந்தக் கோத்திரத்தார் நம்பிக்கை. ஒரு நாள் அந்த விக்கிரகத்திற்குத் தனது கௌரவத்தை செலுத்தி, வணக்க வழிபாடுகளைச் செய்யவென ஓர் இளைஞன் வந்தான். அவன் தன்னைப் படைத்து, பாதுகாத்து வரும் இறைவன் என்ற

உறுதியான நம்பிக்கையுடன் அவ்விக்கிரகத்தின் பாதத்தடியில் வீழ்ந்து வணங்கிக் கொண்டிருந்த வேளை, குஷ்டரோகம் பிடித்த, வயதான, அசிங்கமான நாய் ஒன்று அக்கட்டிடத்தினுள் நுழைந்தது, அவ்விளைஞன் தனது வணக்கத்தை முடித்துக் கொண்டு தலை நிமிர்ந்த போது, அந்த நாய் அதே விக்கிரகத்தின் மற்றொரு பக்கத்தில் தனது பின்னைய காலொன்றைத் தூக்கி சிறு நீர் கழிப்பதைக் காண்டான். அவனுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. நாயை விரட்டியடித்தான். எனினும், அவனது கோபம் மெல்ல மெல்லத் தணிந்து சாதாரண நிலைக்கு வந்த பொழுது சிந்தனை வேலைசெய்ய ஆரம்பித்தது. அந்த நாய் செய்த அசிங்கமான வேலையைக் கூட தடுத்துக் கொள்ள முடியாத இவ்விக்கிரகம் எப்படி எனது இறைவனாக பாதுகாவலனாக முடியும்? எப்படி இப்பிரபஞ்சத்தின் அதிபதியாக முடியும்? என்று அவனது உள்ளுணர்வு அவனைக் கேட்டது, இப்போது உண்மை புரிந்தது. இது என் இறைவனேயல்ல. அவன் (அல்லாஹ்) எங்கோ இருக்கிறான். இது வெறும் கற்சிலை மாத்திரமே! முடிவுக்கு வந்துவிட்டான்.

இந்த விஷயம் தொடர்பாக அவன் இரண்டு விதமாக நடக்க முடியும், ஒன்று, உண்மையான இறைவனை (அல்லாஹ்வை) அறிந்துணர்ந்து, அவனில் விசுவாசம் கொண்டு, அவன் கட்டளைப்படி வாழ்வது. மற்றது, தனது மனசாட்சிக்கும் நேர்மைக்கும் விரோதமான முறையில் தனது கோததிரத்தின் அசத்திய வழியில் செல்வது. உண்மையில் அவன் அக்கட்டிடத்தினுள்ளே கண்ட சம்பவம் இறைவனால் அவனுக்குத் தரப்பட்ட ஒரு

அறிவுறுத்தலாகும். அதன் மூலம் அவனது விக்கிரக வணக்கம் தவறானது எனக் காட்டப்பட்டது.

நாம் கூறியபடி ஒவ்வொரு சமூகத்திற்கும், கோத்திரத்திற்கும், தேசத்திற்கும் இறைத் தூதர்கள் அனுப்பப்பட்டுள்ளனர். அந்த உத்தமர்கள் மனிதனிடம் இயற்கையாகவே அமையப் பெற்ற இறைவிசுவாசத்தை மேலோங்கச் செய்ய சகலவிதமான ஒத்துழைப்பையும் வழங்கினார்கள். அத்துடன் மனிதனுள் அமையப் பெற்றுள்ள 'இறைவனை மட்டும் வணங்க வேண்டும்' என்ற ஆசையை பூரணப்படுத்தும் வகையில் அல்லாஹ்வின் அருள் மொழிகளையும் பெற்றுக் கொடுத்தார்கள். எனினும், பல நபிமார்களின் போதனைகள் சிதைக்கப்பட்டு, சாதாரண நன்மை தீமைகளை எடுத்துக் கூறும் பகுதிகள் மட்டும் மீதப்படுத்தப்பட்டன.

உதாரணமாக: தவ்றாத்தின் பத்து கட்டளைகளைக் குறிப்பிடலாம். அவை கொஸ்பலிலும் தற்போதுள்ள நீதித்துறை சார்ந்த விடயங்களிலும் சேர்த்துக் கொள்ளப்பட்ட போது சிதைவும் திருத்தமும் செய்யப்பட்டதால் சமூகத்தில் கொலை, கொள்ளை, விபசாரம் போன்ற பாவச் செயல்கள் நடப்பதற்கு தாராளமாக வழிகள் திறந்து விடப்பட்டுவிட்டன.

இஸ்லாத்தில் திருத்தம் இல்லை, சிதைவு இல்லை. அது அல்லாஹ் அருளிய விதத்தில் இன்னும் தூய்மையாக இருக்கின்றது. இவை காரணமாக, அல்லாஹ்வில் முழுமையான விசுவாசம் கொள்வது, அவனுக்கு அடிபணிவது, அவனது மார்க்கமான

இஸ்லாத்தை ஏற்று அதன்படி வாழ்வது என்பன தொடர்பாக மனிதன் அல்லாஹ்விடம் விளக்கமளிக்க வேண்டியவனாகின்றான்.

இப்பிரபஞ்சத்தின் அதிபதியான அல்லாஹ் கருணைமிக்கவன். அவனுடைய அன்பையும் அருளையும் வேண்டி நிற்போம். அவன் காட்டிய நேர்வழியில் என்றென்றும் இருக்க உதவும்படி பிரார்த்தனைப் புரிவோம்.

சர்வ புகழும் நன்றியும் அல்லாஹ் ஒருவனுக்கு மட்டுமே உரித்து, சாந்தி, சமாதானம் என்பன இறைத்தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார். வழித்தோன்றல்கள், நண்பர்கள், வழி நடப்போர் ஆகிய அனைவருக்கும் கிடைக்குமாக.

# الدين الصحيح

باللغة التاميلية

تأليف

أبو أمينة بلال فيلبس

ترجمة

شريف الدين محمد منصور

هذا الكتاب من إعداد وترجمة

المكتب التعاوني للدعوة والإرشاد بالبديعة

**المكتب التعاوني للدعوة والإرشاد**
**وتوعية الجاليات في منطقة البطحاء**
تحت إشراف
**وزارة الشؤون الإسلامية والأوقاف والدعوة والإرشاد**
ص . ب : ٢٠٨٢٤ الرياض : ١١٤٦٥
هاتف ٤٠٣٠٢٥١ – ١ – ٠٠٩٦٦
٤٠٣٠١٤٢
٤٠٣٤٥١٧
٤٠٣١٥٨٧
فاكس : ٤٠٥٩٣٨٧
هاتف وفاكس صالة المحاضرات بالبطحاء
٤٠٨٣٤٠٥ – ١ – ٠٠٩٦٦

COOPERATIVE OFFICE
FOR CALL AND GUIDANCE
IN AL-BATHA
UNDER THE SUPERVISION OF
MINISTRY OF ISLAMIC AFFAIRS.
ENDOWMENTS. PROPAGATION AND GUIDANCE
P.O.BOX : 20824 RIYADH: 11465
TEL: 00966-1-4030251
4034517
4031587
4030142
FAX: 4059387
Lecture hall. Tel. +Fax : 00966-1-4083405

باللغة التاميلية

# الدين الصحيح

تأليف

**أبو أمينة - بلال فيلبس**

ترجمة :

**شريف الدين محمد منصور**

هذا الكتاب من إعداد وترجمة
المكتب التعاوني للدعوة والإرشاد بالبديعة
١٤٢٠ هـ


برنامج
وفرعها في السماء
دعوة للمساهمة في دعم
خمسة أنشطة للمكتب
بمبلغ خمسين ريال



للمساهمة في البرنامج
الإيداع في الحساب رقم ٤ / ٩٣٩٠ فرع ١٨٥ الراجحي وإرسال صورة الإيداع على فاكس المكتب : ٤٠٥٩٣٨٧ - ٤
التكرم بالحضور إلى مقر المكتب أو التحويل عن طريق الصراف الآلي إلى الحساب رقم ١٨٥٦٠٨٠١٠٠٦٣٩٠٤



وزارة الشؤون الإسلامية والأوقاف والدعوة والإرشاد
فرع الوزارة في منطقة الرياض
المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بالبطحاء
هاتف : ٤٠٣٠٢٥١ - ٤٠٨٢٤٠٥ ناسوخ : ٤٠٥٩٣٨٧ - ص.ب ٢٠٨٢٤ الرياض ١١٤٩٥